ஸ்ரீ

# திருமால்குறள்வெண்பா.

இது

சென்னை பிரஸிடென்ஸிகாலெஜ் தமிழ்ப்பண்டிதராகிய
புன்னை
**மாடபூசி - ஸ்ரீநிவாஸாசாரியரால்**

இயற்றப்பட்டு,

---

சென்னை
மிமோரியல் அச்சுக்கூடத்தில்
பதிப்பிக்கப்பட்டது.

**1899.**

## திருமால்குறள்வெண்பா.

(நாராயணன் துதி.)

திருமா மகளிருக்குஞ் சீர்மார்பன் பாத
மருமா மலர்பணிந்தேன் மன்.
திருமால் குறள்வெண்பா செப்பவினை காக்க

வருமா லவன்றன் மலர்.

(நம்மாழ்வார் துதி.)

விடகோப வாயரவின் மேவுபிரான் பாதச்
சடகோபா நீயே சரண்.

(ஆண்டாள் துதி.)

காண்டா வனமெரித்த கண்ணற்குக் காதலியாம்
ஆண்டா ளடியே யரண்.

(யதிராஜன் துதி.)

தீதூர் பரசமயச் சிக்கறுத்த நற்குருவாம
பூதூர் முனியரசைப் போற்று.

(மணவாளமாமுனிகள் துதி.)

குணவாள ரைணற்குக் கொன்னி டளித்த
மணவாள மாமுனிவா வா.

(நன்னூரியர் துதி.)

கந்தாடை யாரியர்தங் கான்மலரை யான்பணிந்தே
னந்தாத வின்பமுற நன்கு.

(அவையடக்கம்.)

களியன் கழகத்துட் கட்டுரைத்த தொக்கு
மெளிய னிசைத்த விது.

---

## திருமால்குறள்வெண்பா.

### நூல்.

மணிவண்ணன் பாத மலரைத் தலைமே
லணியுமவர்க் குண்டோ வவம். (க)

அவந்தீர வென்னெஞ்சே யானைமருப் பிர்த்த
நவநீதக் கையனையே நாடு. (உ)

காடென்றும் வீடென்று நங்கையென்றுந் தங்கமெ
வாடுநெஞ்சே மாதவனை வாழ்த்து. [ன்றும் (ங)

வாழ்த்துவார் வல்வினையை வாட்டும் வரதவனைத்

தாழ்த்துவார்க் குண்டோ தவம். (ச)
தவமென் றலைக்குடியேன் றன்மமென் யாவு
மவனே யெனவறிவார்க் காங்கு. (ரு)
ஆங்கமல நீர்போ லமைந்தும் பிரிந்திருப்பார்
தாங்கமலை மார்பன் றமர். (சா)
தமரோ டமர்செய்த தன்மற்குக் கேளா
யமரூடு நின்றா யருள். (எ)
அருளா லுலகெல்லா மன்றனக்க நீண்ட
கருளக் கொடியானே கா. (அ)
காதலிக்கா விந்திர னூர்க் கான்பிடுங்கி வந்துகடற்
பூதலத்து ணட்டாய் புா. (கூ)
புரந்தரனைப் போரின்கட் பொங்கொலியிற் சாய்த்த
நிரஞ்சனனை நீமனனே தேடு. (௧0)
தேடித் தனையடைந்த நின்மலற்குப் பொன்னளித்
சாடிச் சகடழித்தான் றான். [தோன் (௧௧)
தானே கடவுளெனுந் தானவனை மார்பிடந்த
மானேறே வானவர்தம் மன். (௧௨)
திருமால்குறள்வெண்பா. ரு

மன்னு வலிவென்று மாவலிபான் மண்ணிரந்த
வென்னு தனுக்குண்டோ வீடு. (௧௩)
ஈடாவார் யாவரோ வெம்மா னிணையடிக்கட்
கோடாத கொள்கையினர்க் கிங்கு. (௧௪)
குஞ்சரநீள் கையெடுத்துக் கூவக் குளக்கரைவா
யஞ்சலெனவந்தா யலி. (௧ரு)
அலியா யயன்பாடு மம்பற்ப நாபா
வெலியேனுக் கின்றிங் கிரங்கு. (௧௬)
இரங்காத பூதனையை யின்னுயிரை மாய்த்த
வரின்கண்டீர் நந்தன் மகன்.' (௧எ)
மகன்வாய்ச் சகங்கண்ட மாதரசோ தைக்கு

பிரமாய மூட்டினான் மேல். (கஅ)

மேலான வாழ்வெல்லாம் விஞ்சு முலகளந்த
காலானை நாநினைத்தக் கால். (கஅ)

கான்மடுவி னிற்குதித்துக் காளியற்குக் காலளித்த
நான்மறையின் மெய்ப்பொருளை நாடு. (உ0)
நாடாது நாள்கழித்த நன்னெஞ்சே நாரணனைப்
பாடாது விட்டது பார். (உக)

பாராகி விண்ணாகிப் பாவகமாய்க் காலாகி
நீராகி நின்றானை நேர். (உஉ)
நேராய் வெகுண்டெழுந்த நீள்கொக்கின் வாய்பிளந்த
காரானைக் கண்ணனைநீ காண். (உங)
காண்டா வனமெரித்த கண்ணன் கழலிணையை
வேண்டாதார் தம்பிறப்பு வீண். (உச)
ஃ திருமால்குறள்வெண்பா.

வீண்கோப மேற்கொண்டு வீழமர்க்கு முன்னேமி
ஆண்மையற வேனெடுத்தா யாண்டு. (உரு)
ஆண்டுபல வீண்போக்கி யல்லலுறு நெஞ்சேயெம்
மாண்டவரின் மாண்டகுணத் தாழ். (உசு)
ஆழியா லாழியினை யன்றுமறைத் தோன்பிரை
வாழி மனனே வழுத்து. (உஎ)
வழுத்தகினை யாமனமும் வானவர்கோ னின்னைப்
பழிச்சவறி யாநாவும் பாழ். (உஅ)
பாழாக்க வந்தபெரும் பார்தட் பகுவாயைக்
கூழாக்கி னாயென்னைக் கொள். (உகூ)
கொள்கொம் பிலாத கொடிநே ரடியேனை
யொள்காது காத்தலியல் பாம். (ஙூ0)

பாஞ்சாலிக் கன்றலைக்கட் பட்டாடை யிட்டளித்த
நீஞ்செய்தி பாவந் தெறும். (௩௧)
தெறநின்ற கன்றைவிளக் கெட்டபழு மண்மே
லுறவெறிந்த வுத்தமன்பே ரோது. (௩௨)
ஓதிப் புகழ்தக்க வுத்தமன்கா ளிர்கண்டேன்
பாதிப் பிறைச்சடையான் பால். (௩௩)
பாலாழிக் கண்வளரும் பாம்பணையான் பாதத்தைத்
தோலாதென் னைவே துதி. (௩௪)
துதிசெய் தனபாதத் தொண்டுபுரிந் தோரை
மதியா தவர்பிறப்பு வம்பு. (௩௫)
வம்பேய்ந்த வைம்பொறியின் வாய்ப்பட் டழியாது
கொம்பேந் துரத்தானைக் கூறு. (௩௬)

திருமாலிருஞ்சோலை வெண்பா. எ

கூறுபுகழ்க் கோவிந்தா கோணிங்கி யுன்விட்டி
லேறுவழி கண்டுகந்தி தனே. (௩எ)
தேமௌழுகு பூந்துளவத் தெய்வத் திருத்தாராய்
வாமௌழியா வாழ்வருள வா. (௩அ)
வாங்குகட லும்புவியும் வானும் பலதிசையு
மாங்குமக்குக் கண்ணே வனம். (௩௯)
அன்னமா யாரணத்தை யம்புயற்கு முன்னுரைத்த
பன்னரியின் சீரேயின் பம். (௪0)
பஞ்சவர்க்குத் தூதுவனைப் பாம்புயர்த்தோன் பட்
ளாஞ்சலிந்திச் சென்றருள். [டணத்து (௪௧)
அருணிறைந்த கேசவனே யச்சுதனே நின்னைக்
கருதார்க்குப் போமோ கரு. (௪௨)
கருங்கடலிற் கண்டுயிலுங் கார்வண்ணன் றன்னை
யொருங்குணர்வார் மோசத் துளர். (௪௩)
உளனிலனு யும்பர்க்கு மோதவரி யானை

யெளியேன் புகழ்வ தெவன். (சச)
எவன்மீனுய்ச் சோமுகனை யிடறித்து நின்று
னவன்வண்ண மாங்கர்ச்சு னம். (சரு)
அர்ச்சுனற்குச் சாரதியா யாங்குபதி னெட்டளித்த
நிர்ச்சரரின் றேவை நினை. (சசு)
நினையாது நின்னும நீள்புவியில் யாரே
வினைநீங்கி வீடெய்து வார். (சஎ)
வார்சடையான் வாரிசத்தான் வானவர்கோன் றுமறி
கூர்படையாய் நின்புகழின் கூறு. [யார் (சஅ)

அ திருமால்குறள்வெண்பா.

கூற்றுங் குலையுங் கொடுவினையு நீங்கிடுமால்
போற்றிற் புனிதன் புகழ். (சகூ)
புகழாச் சிசுபாலன் பொன்முடிபோய் வீழ
விகலாழி தொட்டா யிரங்கு. (ருo)
இரங்கிரை மேய்த்தவிட மெங்கோனே முன்ன
மரங்கெழுமு கான மலை. (ருக)
மலையான் மழைதடுத்த மாமுகிலின் பாத
முலையாதென் னெஞ்சே யுணர். (ருஉ)
உணர்வா ருளமலர்க்க ணூறுறுக் தேனே
துணர்போலுந் துன்பந் துடை. (ருங)
துடைத்துப் படைத்தளிக்கத் தொன்மூ வுருவ
மெடுத்தவனே யெங்க ளிறை. (ருச)
இறையாய்த் தறையாண்டு மென்னபயன் கண்டீர்
மறையான் றும மறந்து. (ருரு)
மறந்தாலு மென்னை மறவா விகழ்ந்து
துறந்தாலு நீயே துணை. (ருசு)
துணையு மெனக்கணியுந் தொல்புவியு மெல்லாம்

பணைமருதஞ் சாய்த்தான் பதம். (நின)
பதமறியா செய்யதயிர்ப் பாலைக்கு மூத்தி
யெதுபதியே யீந்ததுவென் னே. (நிஅ)
என்னே யுனதாண்மை யிசசொடுங் காட்டனலை
யுன்வாயிட் டுண்டிகந்தை யால். (நிகூ)
ஆலிலையிற் பாலகனு யன்றுபெரு நீர்த்துயின்ற
மாலிறையே நீயருள வா. (கூ0)
திருமால்குறள்வெண்பா. கூ

வானுடர்க் காப்பாலின் வண்ணக் கடல்சடைந்தோ
கோனு கணைக்கிடந்த கோ. [ன் (கூக)
கோமன்ன ரைப்பலகாற் கொற்ற மடக்கியது
கோமன் மழுவான் சினம். (கூ௨)
சினங்கொண்ட தானவனைச் செற்றதிருக் கேழன்
மனங்கொண்டேற் குண்டோ மறம். (கூங)
மறவாமை யாய்க்கடலுண் மந்தரத்தைத் தாங்கு
மிறைவா வினக்கா ரிணை. (கூச)
இணையிலாப் பெண்ணணங்கா வின்னமுத மீந்த
துணைவா வதன்மூலஞ் சொல். (கூநி)
சொல்லரிய அன்பத்தேன் அன்மதியே னின்பதத்
புல்லுவதெக் காலம் புகல். [தைப் (கூகூ)
புகல்புகுந்தே னின்னைப் புயல்வண்ணா நண்ணா
ரிகலென்ன செய்யு மினி. (கூஎ)
இனியஞ்சே னெஞ்சமே யெம்பெருமான் காக்க
நனிநின்று னம்மை நயந்து. (கூஅ)
நயமுணரா வைம்பொறியை நம்பிக்கெட் டேனைத்
தமையுடையாய் நன்மையுறத் தாங்கு. (கூகூ)
தாங்கா திகழ்ந்திடினீ தாமோ தராவென்னைத்

தாங்காப் பலரெலரோ தான். (௭௦)
தானே தலைக்கிணையாந் தாசரதி கோசிகனைக்
கொணுசக் கொண்டதற்கென் கூறு. (௭௧)
கூறு பிறைச்சடையான் கொண்டவில்லைக் கொற்
வேறுபடச் செய்தாய் விரும்பு. [றவையுள்(௭௨)

௧௦ திருமாலகுறள்வெண்பா.

விரும்பு சுவைக்கனியே விண்ணமுதே செய்ய
கரும்பே கருமணியே கா. (௭௩)
காகா வெனவிழ்ந்த காக்கையினை நீகாக்க
மாகாத்தா னென்பரதென் மற்று. (௭௪)
மற்றாரா ரென்சொல்லார் மாயனைவிட் டன்னியரைப்
பற்றிப் பதம்பணிந்தக் கால். (௭௫)
காற்றுகளாம் காகுத்தா கல்லினைப்பெண் ணாக்கிய
னேற்றத்துக் கிடுண்டோ வீங்கு. [கின் (௭௬)
ஈங்குமயற் கண்ணமூந்தி யெம்மான் பெயர்மறந்தி
ராங்குறுமக் கார்துணையா வார். (௭௭)
வார்கடலை யோர்கணையால் வற்றுவித்த வில்லவனின்
கார்மேனி யென்கண்முன் காட்டு. (௭௮)
காட்டும் பலமாயக் காட்சியினை யானறிய
மாட்டுவனோ மாமாயா மன். (௭௯)
மன்னு மணிவண்ணா மாயவனே மாமார்பா
வென்னுத நெஞ்சே யிரங்கு. (௮௦)
இரங்காத வாலிபட வீசாமறைந்து
சரங்கோத்த தென்னோ சரி. (௮௧
சரிவளைக்கை மாதரார் தம்வலையுட் சிக்கி
யிரிமனமே யெம்மானை யேத்து. (௮௨)
ஏத்தவறி யாவெளியே னீடேற வின்னருளாம்

காத்திடநீ நின்னுட் கருது. (அ௩)
கருதரிய மேனியாய் காயாம்பூ வண்ண
வொருதனியே னெஞ்சத்து ளொன்று. (அ௪)
௨௫
பெருமாவல்
பேசறியேன் சொல்லது
வாசகத்தை நீயினிதா வாங்கு.
வாங்கு திரைக்கரையுள் வந்துபணி வீடவை,
றூங்கிலங்கை தந்ததுமெய் வாறு. (அ௭)
ஆறணிந்த வேணியனு மம்புயத்தோ னும்முடலி,
கூறுபெறக் கொண்டோயெற் கொள்.
கொள்ளா தினியுலகுங் கூற்றுமெனே யள்ளாது
புள்ளேற்றா யென்னுட் புகு. (அ௯)
புகலரிய நான்மறைக்கும் போற்றரியாய் நிற்குந்
தகன்றம்பி யானதுமோர் கூத்து. (௯0)
கூத்தன்போற் பல்லுருவங் கொள்ளுமுயிர் கோபா
நீத்தொழிலே நீத்திருக்கச் செய். [லா (௯௧)
செயயதிரு நாடதனைச் சேரச் சராசரங்க
ளாயபணித் தாயென் னருள். (௯௨)
அருளொழுகு கண்ணிணையு மம்புயநேர் வாயும்
மருளறயான் காணவெதிர் வா. (௯௩)
வாயுனையே வாழ்த்துகவுன் வண்ணத்தைக் காண்க
மாயவுன்பேர் கேட்கசெவி மற்று. [விழி (௯௪)
மற்றென்ன செய்வேனான் மாலேநின் பொற்பாதக்
குற்றேவ லன்றிக் குறித்து. (௯௫)
குறித்தவெலாம் வந்தெய்துங் கோள்கொடுமை செய்

தறித்தனயன் பேர்சொல்லத் தான். [யா (௬௬)
தானவரை வேரறுத்த தாமோ தரற்கடிய
ருனைவென் னெஞ்சேவை நார். (௬எ)

லகுறள்வெண்பா.

ிய விண்ணமுதே செய்ய
கா. (௬அ)
பர் பாடநெஞ்சே
காக்
ப ஞடு. (௬௯)
ாதுவி நற்றூபங் காட்டியுனைப்
மற
பாடுவேற் குண்டோ பவம். (௧00)
வபாசத் துள்ளாழ்ந்து பட்டொழிவன் மாயா
கா்ற-க நீமுனிந்தா லன்று. (௧0௧)
னெ
அன்றே வலதின்றே வத்தா வெனக்குறுதி
யென்றோ வெனைக்காத் திரு. (௧0௨)
இருவினையு ளரப்புண்ட வின்னுயிர்கா ளெம்மான்
றிருவடியைச் சேர்மின் றினம். (௧0௩)
தினமா தரைநாடுந் தீமனனே சோதி
வனமாலை மார்பனையே வாழ்த்து. (௧0௪)
வாழ்த்துகந்து வல்லமருள் வாணற் குயிரளித்த
காழ்த்திறத்த வில்லுடையாய் கா. (௧0௫)
காராணக் கற்பகத்தைக் கண்மணியைக் கோமளத்
சீராணை யென்னுளமே செப்பு. [தைச் (௧0௬)
செப்பே னுனநாமஞ் சீர்மையிலார் நட்புவிடே
னெப்போ தறுவே னிடர். (௧0எ)
இடரே தினிநெஞ்சே யெந்தமக்கா நின்று

முற்றிற்று.

(ஆக்கியோன் பெயர்.)

திருமால் குறள்வெண்பா செய்தானும் புன்னை
வருசினி வாசன் மகிழ்ந்து.